# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 விலை 1 அணா

மலர் 13] சென்னை 19-8-56 துன்முகி ஆண்டு ஆவணி 4—(வெளியூர் 20-8-56 ஆவணி, 5) [இதழ் 5


### இந்திய நிபுணர்களுக்கு ரஷ்யாவில் பயிற்சி

புதுடில்லி, ஆக. 18

700-க்கு மேற்பட்ட இந்திய உலோக நிபுணர்கள், 1958-ம் ஆண்டுக்குள் சோவியத் யூனியனில் இரும்பு, உருக்கு தொழிற்சாலைகளில் பலவித வேலைகளிலும் பயிற்சி பெறுவர்.

ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் 80 பேர் தங்கள் பயிற்சியைத் தொடங்குவர்.

### இந்தியாவிலேயே டைனமோ தயாரிப்பு

கோரக்பூர், ஆக. 17—

கடந்த 100 வருடங்களாக வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுவந்த, ரயில் விளக்குகளுக்குத் தேவையான டைனமோக்கள் இனிமேல் இந்தியாவிலேயே தயார் செய்யப்படும்.

# தேர்தல் கூட்டணிக்கு மென்மேலும் ஆதரவு

## ஜெயப்பிரகாசரின் கருத்தை ஆதரிக்கிறேன் —காமத்

பம்பாய் ஆக. 19—

மற்ற இடதுசாரிக் கட்சிகளுடன் பிரஜா சோஷலிஸ்ட் கட்சி தேர்தல் கூட்டுறவு ஏற்படுத்திக் கொள்ளலாமென்று திரு. ஜெயப்பிரகாஷ் நாராயண் கூறிய யோசனையை தாம் ஆதரிப்பதாக மற்றொரு பிரஜா சோஷலிஸ்ட் தலைவர் திரு. எச். வி. காமத் (எம். பி.) நேற்று நிருபர்களிடம் கூறினார்.

லோக் சபையில் சுமார் 200 ஸ்தானங்களையாவது கைப்பற்ற வேண்டுமென்பது தங்கள் நோக்கமென்று அவர் குறிப்பிட்டார்.

மேற்கு வங்காளத்திலும், கேரளத்திலும் எதிர்க்கட்சிகள் மந்திரி சபை அமைக்கக் கூடிய சாத்தியக் கூறு இருப்பதாகவும் திரு. காமத் மேலும் கூறினார்.

### காங்கிரஸை எதிர்க்க கூட்டணி அவசியம்

#### பி. சோ. கட்சியினர் கருத்து

ஆமதாபாத், ஆக. 18...

மகாராஷ்டிரா பிரஜாசோஷலிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி திரு. எஸ். எம். ஜோஷி தலைமையில் கூடிய மகாராஷ்டிரா பி-சோ. நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில், வருகின்ற தேர்தல்களில் காங்கிரஸை தீவிரமான முறையில் எதிர்க்க எல்லா இடதுசாரிக் கட்சிகளும் ஒன்றுசேர வேண்டியதவசியம் என்று பலர் பேசினர்.

புது டில்லி, ஆக. 17—

பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர் திரு. அசோக மேத்தா (எம்.பி.) இன்று இங்கு, கம்யூனிஸ்ட் தலைவர்கள் பி. ஸி. ஜோஷி, இ. எம். எஸ். நம்பூதிரிப்பாத் ஆகியோரை சந்தித்துப் பேசினர். இன்று நாட்டிலுள்ள அரசியல் நிலைமையைப் பற்றி அவர்கள் விவாதித்தார்கள், என்று தெரிகிறது.

### மஹா குஜராத் பரிஷத் அமைப்பு

#### காங்கிரஸிலிருந்து பலர் ராஜினாமா

பரோடா, ஆக. 17—

கம்யூனிஸ்ட் கட்சி, பிரஜா சோஷலிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் உட்பட பரோடா நகரவாசிகள் சேர்ந்த ஒரு பொதுக்கூட்டத்தில் இருமொழி பம்பாய் ராஜ்யம் அமைக்கப்பட்டுள்ளதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்வதற்காக மஹாகுஜராத் பரிஷத் என்ற ஸ்தாபனம் அமைக்கப்பட்டது. அத்துமீறிய போலீஸ் நடவடிக்கைகளைப் பற்றிப் பகிரங்க விசாரணை செய்யும்படி கோரிக்கை செய்யப்பட்டது. பரோடா நகரைச் சேர்ந்த 25 வக்கீல்கள் காங்கிரஸிலிருந்து ராஜினமாச் செய்து குஜராத்திற்குத் தனிராஜ்யம் அவசியம் என்று அறிக்கை விட்டனர்.

## குஜராத் சம்பவங்களுக்கு சர்க்காரே பொறுப்பாளி

### அஜய் கோஷ் விளக்கம்

கல்கத்தா, ஆக. 18—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசி திரு. அஜய் கோஷ் இங்கு நேற்று பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசுகையில், "குஜராத்தில் நடைபெறும் சம்பவங்கள், இருமொழி ராஜ்யம் ஏற்படுத்த காங்கிரஸ் செய்துள்ள முடிவுக்கு மக்கள் தெரிவிக்கும் கண்டனம்தான்" என்றார்.

"குஜராத்தில் நடைபெற்று வரும் சம்பவங்களுக்கெல்லாம் இடதுசாரிக் கட்சிகளும், விஷமிகளும்தான் காரணமென்று கூறப்படுவதை மக்கள் நம்புவதில்லை. ஏனெனில் குஜராத்தில் காங்கிரஸ்தான் மிகவும் பலம் வாய்ந்த கட்சி. இடதுசாரிக் கட்சிகள் பலம் குறைந்தவைதான், என்று அவர் மேலும் கூறினார்.

"இருமொழி பம்பாய் ராஜ்யம் ஏற்படுத்துவதென்ற முடிவு மாகாணப் பித்துக்கு எதிராக தேசியத்தின் வெற்றி என்று கூறப்படுவது சுத்த அபத்தம்" என்றார்.

"சர்க்கார் மொழிவாரி ராஜ்யங்களை ஏற்படுத்தும் கொள்கையை உறுதியாகக் கடைப்பிடித்திருக்குமேயானால் குஜராத்தில் ஏற்பட்ட சம்பவங்களையெல்லாம் தவிர்த்திருக்கலாம்" என்றார்.

### ஏ. கே. ஜி. மீது வழக்கு

#### உண்ணாவிரதம் நீடிக்கிறது

ஆமதாபாத் ஆக. 18—

தடையுத்தரவை மீறியதாகக் கைது செய்யப்பட்ட கம்யூனிஸ்ட் எம். பி. ஏ. கே. கோபாலன் மீது தொடரப்பட்ட வழக்கு விசாரணையை ஆமதாபாத் நீதிபதி ஆகஸ்ட் 24-ந் தேதிக்கு ஒத்திவைத்திருக்கிறார். தோழர் கோபாலன் சபர்மதி மத்தியச் சிறையில் தொடர்ந்து உண்ணாவிரதம் இருக்கிறார்.

# ஆசிய-ஆப்பிரிக்க மகாநாட்டை கூட்டுவோம்

## நாசர் முழக்கம்

லண்டன், ஆக. 18—

சூயஸ் நெருக்கடி தீர ரஷ்ய வெளி நாட்டு மந்திரி நேற்று லண்டன் மகாநாட்டில் சமர்ப்பித்த 7 அம்சத் திட்டத்தை இன்று பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி செல்வின் லாயிட் நிராகரித்தார். இந்தப் பிரச்சினையை பரிசீலனை செய்வதற்கு இன்னும் விரிவான முறையில் வேறு ஒரு மகாநாடு நடத்தவேண்டும் என்று ஷெப்பிலாவ் கூறிய யோசனையையும் பிரிட்டிஷ் மந்திரி செல்வின் லாயிட் ஏற்றுக்கொள்ளவில்லை.

ரஷ்யாவின் திட்டத்தை நிராகரித்து பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி பேசும்போது, கால்வாயின் எதிர்காலம் பற்றி முதலில் சில கொள்கைகளை இந்த மகாநாடு ஒப்புக் கொண்டு, பின்னர் அவற்றை எகிப்திய சர்க்காரிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்று அதிகார தோரணையில் தெரிவித்தார்.

செய்ரோ, ஆக. 18—

அரேபிய செய்தி ஸ்தாபனத்தின் ஜெனரல் மானேருக்கு இன்று அளித்தப் பேட்டியில், டல்லஸ் தெரிவித்தது போன்ற எந்தவித சர்வதேசக் கட்டுப்பாட்டையும் சூயஸ் நிர்வாக விஷயத்தில் ஏற்றுக் கொள்ளமுடியாது என்று எகிப்திய ஜனாதிபதி நாஸர் அறிவித்தார், சூயஸ் கால்வாயின் கண்காணிப்புக் குறித்து அவ்வப்போது ஆலோசனைகள் கூறுவதற்கு முக்கிய நாடுகள் அடங்கிய ஒரு ஆலோசனைக் கமிட்டி அமைப்பதுபற்றி நாஸரிடம் அபிப்பிராயம் கேட்கப்பட்டபோது, "இதைப்பற்றி வேண்டுமானால் பேச்சுவார்த்தை நடத்தலாம்" என்று கூறினார்.

### கெய்ரோவில் ஆசிய-ஆப்ரிக்க மகாநாடு

சூயஸ் தகராறுக்குப் பரிகாரம் காணும் புது முயற்சியாக, கெய்ரோவில் ஆசிய ஆப்ரிக்க மகாநாட்டைக் கூட்டி அதில் இந்தப் பிரச்னையை விவாதிப்பது சம்பந்தமாக ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது. இத்தகைய ஒரு முயற்சியை இந்தோனேஷியா உள்பட பல ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் ஆதரிப்பதாகத் தெரிகிறது. இந்த மகாநாட்டில் சூயஸ் விவகாரத்தில் சம்பந்தப்பட்ட நாடுகளையும் ஒரு குறிப்பிட்டக் கட்டத்தில் அனுமதிக்கலாம் என்றும் அபிப்பிராயம் தெரிவிக்கப்படுகிறது.

### இந்தியாவின் திட்டத்திற்கு ஆதரவு

லண்டன், ஆக. 18—

லண்டன் மகாநாட்டில்

(2-ம் பக்கம் பார்க்க)

# தமிழுக்குப் போட்டியல்ல ஹிந்தி

## தமிழ் ஆட்சிமொழி யாவதை ஜனாதிபதி வரவேற்கிறார்

சென்னை, ஆக. 18—

இங்கு தக்ஷிண பாரத ஹிந்திப் பிரச்சார சபையின் 31-வது ஆண்டு விழாவில் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் பேசுகையில், தமிழ் ஆட்சி மொழி ஆவதை வரவேற்றார். அவர் பேசுகையில், ஹிந்திக்கும் பிரதேச மொழிகளுக்கும் நிர்வாகத் துறையிலோ கல்வித் துறையிலோ, இதர விஷயங்களிலோ ஒருக்காலும் போட்டி இருக்காது. ஸ்தல மொழிகளுக்குப் போட்டியாக இருக்கிற ஒரே மொழி ஆங்கிலம்தான்! அதை காலக் கிரமத்தில் அகற்றிவிடுவோம்; கொஞ்சம் கொஞ்சமாக அகற்றிக்கொண்டும் வருகிறோம்" என்றார்.

ஆங்கிலத்தைப்பற்றி குறிப்பிடுகையில் ஆங்கிலம் சர்வதேச பாஷையாகவிளங்குவதால், அதை நாம் பகிஷ்கரிக்கப்போவதுமில்லை நிராகரிக்கப்போவதுமில்லை. நவீன கால கருத்துக்களுடன் தொடர்பு கொள்ளுவதற்கும், நமது நன்மைக்காக சர்வதேசப் பிரச்னைகளிலும் ஆங்கிலத்தைப் பயன்படுத்த வேண்டியிருப்பதால், ஆங்கிலத்தையும் தொடர்ந்து பராமரிப்போம்.

தமிழை ஆட்சி மொழி ஆக்குவதென்று சென்னை சர்க்கார் பிரகடனம் செய்திருப்பதை இன்று காலையில் கேள்விப்பட்டவுடன் சந்தோஷமடைந்தேன். கொஞ்சம் கொஞ்சமாக தமிழ் ஆங்கிலத்தை பின்னுக்குத் தள்ளுமென்று நம்புகிறேன்" என்றார்.

### இன்றைய நிகழ்ச்சி

சென்னை: சூயஸ் தினம்: காமன்வெல்த் எதிர்ப்பு சங்கத்தின் சார்தல் இன்று மாலை 6 மணிக்கு மைலாப்பூர் லஸ் ஸ்ரீனிவாச சாஸ்திரி ஹாலில் பொதுக் கூட்டம்: ஸ்ரீ எச். டி. ராஜா எம்.பி., தலைமை: பேச்சாளர்கள்: ஸ்ரீ ராஜா அரிய ரத்னம், ஸ்ரீ ப. ஜீவானந்தம் எம்.எல்.ஏ., ஸ்ரீ வி. பாலகிருஷ்ணன் எம்.எல்.ஏ., சின்ன அண்ணாமலை, ஸ்ரீ எஸ். ஏ. ரஹீம், ஸ்ரீ கே. அருணாசலம், ஸ்ரீ எஸ். ராமநாதன், ஸ்ரீ ஜீ. சபாபதி, ஸ்ரீமதி எஸ். விஜயலட்சுமி.

# சுதந்திரமே பிரதானம்

## கம்யூனிஸ்ட் எதிர்ப்பைப்பற்றி கவலையில்லை —ககோனவிச்

மாஸ்கோ, ஆக. 18—

ஒரு நாடு கம்யூனிஸ்ட் நாடா அல்லவா? என்பது பற்றி எங்களுக்குக் கவலை இல்லை. தேசங்களின் சுதந்திரமும் அரசுரிமையும் தான் பிரதானம் என்று மாஸ்கோவில் இந்தோனேஷிய ஸ்தானிகராலயத்தில் நடைபெற்ற விருந்தொன்றில் சோவியத் உதவிப் பிரதமர் எல். எம். காகனோவிச் கூறினார்.

எகிப்து சர்க்கார் கம்யூனிஸ்ட் எதிர்ப்பில் இறங்கி ரஷ்யக் கப்பல்களைத் தடுக்கும் நிலை வருங்காலத்தில் ஏற்படாமலிருக்க சூயஸ் கால்வாயை ஒரு சர்வதேச கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவருவது ரஷ்யாவிற்கும் நல்லதல்லவா என்று நிருபர் கேள்வி கேட்டார்.

எல்லா தேசங்களுக்கும் நீர்மார்க்கப் போக்குவரத்து வசதி ஏற்படுவது முக்கியமானதே. ஆனால் ஒரு நாட்டின் தேசிய சுதந்திரம் அதைவிட முக்கியமானது என்று காகனோவிச பதிலளித்தார்.

# கோவாவில் 500 பேர் கைது

## இருவர் கொல்லப்பட்டனர்

பெல்காம், ஆக. 17—

தேச விடுதலை இயக்கத்துக்கு உதவுகிறார்கள் என்ற சந்தேகத்தின் பேரில் 500 பேர்களுக்கு மேல் கைது செய்யப்பட்டிருக்கிறார்களென்றும், போர்த்துகீசிய போலீஸாரால் 2 தேச பக்தர்கள் அடித்தே கொல்லப்பட்டிருக்கிறார்களென்றும், தேசிய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ பீட்டர் ஆல்வாரிஸ் கூறுகிறார்.

மேலும் தெரிவிக்கையில், கைது செய்யப்பட்டவர்களில் பலர் பாதுகாப்புப் படையினரென்றும், தேசியவாதிகளை ஒளித்துவைத்துப் பாதுகாத்தார்கள் என்று காரணம் காட்டி டையூவுக்கு 3 அதிகாரிகள் மாற்றப்பட்டார்களென்றும், பெரிய வியாபாரிகளும் பாதிரிகளும்கூட சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டிருப்பதும் கோவா சர்க்காருக்கு கவலையளித்திருப்பதாகவும், அரிசி ஒரு படி ரூ. 1-8-0வுக்கு விற்பதால் அரசியல் நெருக்கடி அதிகரித்து விட்டதாகவும் கூறினார்.

# மக்கள் குரல்

## மிராசுதார்களுக்கு "சுதந்திரத்தின்" வக்காலத்து

"சுதந்திரம்" பத்திரிகை, ஒவ்வொரு வாரமும் ஜனநாயகத்தைப் பொழிந்து தள்ளுகிறது. அதன் ஆசிரியர் எச். டி. ராஜா, கம்யூனிஸ்டுக் கட்சி, பிரஜா சோஷலிஸ்டுக் கட்சி, சோஷலிஸ்டுக் கட்சி, தமிழரசுக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் ஆகிய கட்சிகளோடு, கூட்டணிக் கூட்டங்களில் கலந்துகொண்டு, காங்கிரஸினுடைய பிற்போக்கை வெளுத்து வாங்குகிறார்.

அப்படியிருக்க "சுதந்திரம்" நியாயவார மசோதாவை அநியாய வார மசோதா என்று தலையங்கம் எழுதிக் கண்டித்திருக்கிறதே, ஏன்? கம்யூனிஸ்டு, பி. சோ., சோஷலிஸ்டு, தி. மு. க., த. க. ஆகிய கட்சிகள் எல்லாம் ஆதரிக்கிற, காங்கிரஸ் சர்க்கார் கொண்டு வந்திருக்கிற, மசோதாவை, 'கம்யூனிஸ்டு' மசோதா என்று பூச்சாண்டி காட்டுகிறதே, ஏன்? நியாயவார மசோதாவுக்கு எதிரிடையாக "இந்து"வும் "சுதேசமித்திரனும்" விடாமல் எழுதி வருகிற கருத்துக்களை, "சுதந்திரம்" அப்படியே 'காப்பி' அடித்திருக்கிறதே, ஏன்?

தேர்தல் திருவிளையாடல்களில் மிராசுதாருக்கு வக்காலத்து வாங்குவதும் ஒரு விளையாடல் என்று எனக்குப் படுகிறது.

இப்படிக்கு,
கணபதி,
தஞ்சாவூர்.

●

## ஜனசக்தியை கண்டோம் சில ஆலோசனைகள்

ஜனசக்தி தினசரியை சுதந்திர நந்நாளில் ஆவலுடன் எதிர்ப்பார்த்தோம். எங்கள் ஏஜண்ட்டுக்கு பத்திரிக்கை வராதது கண்டு வருந்தினோம். பிற்பகல் ஒரு மணிக்கு எங்கள் ஊரில் ஒரு ஜனசக்தியை கண்டோம்- மகிழ்ச்சியுற்றோம். முதல் பக்க, கடைசிபக்க செய்திகளும், அமைப்புகளும், அனைவர் கவனத்தையும் கவர்ந்தன.

செய்திகள் சுருக்கமாக இருந்தாலும், எல்லா தரப்பு செய்திகளும் போடுவதோடு, மார்கட், காலங்களை போடவேண்டும். ஆசிரியர் குழுவிற்கும், அச்சக தோழர்களுக்கும் எங்கள் சுதந்திர தின வாழ்த்துக்கள் உரித்தாகுக!

எம். பி. மணிவேல்
கிராம விவசாயிகள் சங்கம்
எரியோடு திண்டுக்கல்.

## சொல்லும் செயலும்

அன்புடையீர்,

நெசவாளர் கூட்டுறவு சொசைடிகளில் தேங்கியிருக்கும் கைத்தறி ஜவுளிகளை சர்க்கார் வாங்கி விற்பனை செய்யவேண்டும் என்று சமீபத்தில் மத்திய சர்க்கார் தொழில் மந்திரி கூறினார். ஆனால் சத்துவாச்சாரி நெசவாளர் சொஸைட்டியில் தேங்கியிருக்கும் ரூ. 1400 பெறுமான ஜவுளியை உடன் எடுத்து விற்பனை செய்யும்படி ஜில்லா கோவாப்பரேடிவ் ரிஜிஸ்தாருக்கு எழுதியும் ஒன்றும் பதில் இல்லை.

பொன்னுசாமி.

## வாழ்த்துக்கள்

### பெரியார் வாழ்த்து!

திருச்சி, ஆக. 14—

'ஜனசக்தி' மக்களுக்கு நற்பயன் அளிக்கும் திருத்தொண்டோடு நீண்டநாள் வாழ வேண்டுமாய் விழைகின்றேன். ஈ. வே. ரா.

●

'ஜனசக்தி' தினசரியாவதை வரவேற்று ஆசியும் வாழ்த்துரைகளும் அனுப்பியவர்கள்:—

சக்திதாசன் சுப்பிரமணியம், எழுத்தாளர், சென்னை; கவி ஆறுமுகனார், திண்டுக்கல்; ஐக்கிய முன்னணி வாசகசாலை. இராஜபாளையம்; வி. ராமச்சந்திரன், காரியதரிசி. ஐக்கிய முற்போக்கு வாலிபர் சங்கம், மதுரை; பெ. மலைச்சாமிதுரை. சிவகெங்கை, ஏ. அருணாசலம், பாரத் டிரேடிங் கம்பெனி, மதுரை. மதுரை எம்பிராய்டரி ஒர்க்ஸ், திருச்சிராப்பள்ளி, ம. சோ, கங்காதரன், காஞ்சிபுரம், சி, சமயக்கோனார், பொதும்பு, வி. ராமசாமி, இலக்கியப்பண்ணை, கரூர். தே. சி, ராஜாராவ். மதுரை, ஆர். பாலுச்சாமி, அய்யனாபுரம். எஸ். எம். ஜே. அலிமுகமது சாகிபு. மளிகை வியாபாரம், திண்டிவனம்; கலைக்கண்ணன், எழுத்தாளர், அன்னவாசல், டி. எஸ். ராமசாமி, நாகர்கோவில்.

பாரதிப் படிப்பகம், முருங்கப்பாளையம், முற்போக்கு வாலிபர் மன்றம், புதுச்சேரி, செ. ஆணிமுத்து, பரமக்குடி கொடிமுடி ராஜகோபாலன், சென்னை பெரிய பட்டாளம் பழைய மாணவர் சங்கம் நாசகசாலை கொழும்பு.

டி. செங்கல்வராயன், முன்னாள் மேயர், சென்னை; கே. ஆர். கல்யாணராமன், காரியதரிசி, தீனபந்து ஆசிரமம், வாலாஜாப் பேட்டை.

(முதற் பக்கத் தொடர்ச்சி)

இந்தியப் பிரதிநிதி சூயஸ் பிரச்னையின் பிரதான அம்சம் பற்றி இன்னும் பேசவில்லை. எனினும் அதற்கு முன்னதாக ஒரு முக்கிய சாதனையில் வெற்றி கண்டுள்ளார். அதாவது, எந்த முடிவையும் வோட்டுகள்மூலம் நிர்ணயிக்கக் கூடாது என்று வற்புறுத்தி, இந்த யோசனையை மகாநாடு ஏற்றுக்கொள்ளும்படி வைத்துள்ளார். அதோடு 'கட்டுப்பாடு' என்ற வார்த்தையை உபயோகிப்பதையும் அவர் கண்டித்துள்ளார்.

### பாகிஸ்தானில் மந்திரி

லண்டன் மகாநாட்டில் பாகிஸ்தான் சார்பாக கலந்துகொண்ட பிரதிநிதி பேசுகையில், சூயசை எகிப்து தேச உடமையாக்கியது தீர்ந்து போன விஷயம் என்று குறிப்பிட்டார். இனி செய்ய வேண்டியது சூயஸ்கால்வாய் வழியாக சகல தேசங்களும் சுதந்திரமான கப்பல் போக்குவரத்து நடத்துவதற்கு எகிப்துடன் ஒரு உடன்பாட்டிற்கு வருவதே என்றார். இதற்காக ஒரு கமிட்டி அமைக்கலாம் என அவர்யோசனை தெரிவித்தார்.

### புத்தி வருகிறது!

லண்டன், ஆக. 18—

எகிப்துமீது ஆயுத பலம் கொண்டு தங்களது சகல தேசக் கட்டுப்பாடு திட்டத்தைத் திணிக்க மேற்கு நாடுகள் விரும்பவில்லை என்பதற்கான அறிகுறிகள் இன்று லண்டன் மகாநாட்டில் தென்பட்டன. பிரிட்டிஷ் பிரதிநிதியின் பேச்சிலிருந்து, தனது பழைய பயமுறுத்தல் நிலையிலிருந்து பிரிட்டன் இறங்கிவரத் தயாராக இருப்பதாகத் தெரிய வருகிறது. வெகு அண்மையில் நடைபெற்ற பிரிட்டிஷ் மந்திரி சபைக் கூட்டத்தில், இனிமேல் நாஸரைப் பற்றி ரொம்பவும் நிதானமாகப் பேசவேண்டுமென்று ஈடன் குறிப்பிட்டாராம்.

### ஆஸ்திரேலியாவின் புத்திமதி

மெல்போர்ன், ஆக. 18—

சூயஸ் பிரச்னையில் பிரிட்டன் மிகவும் நிதானமான போக்கைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றும், நெருக்கடியை முற்றவைக்கும் நடவடிக்கையிலும் இறங்கக் கூடாதென்றும் ஆஸ்திரேலிய பிரதம மந்திரி, ஈடனுக்கு ஆலோசனை கூறியுள்ளதாகத் தெரிகிறது.

## 21 நாட்களாக வேலையில்லை

### களப்பால் விவசாயிகள் கிளர்ச்சி

ஆணுக்கு தினக்கூலி நெல் 2 மரக்காலும், பெண்ணுக்கு $1\frac{1}{2}$ மரக்காலும் வேண்டுமென்று கேட்டதற்காக களப்பால் விவசாயத் தொழிலாளிகள் ஸ்தல மிராசுதாரரால் வேலையிலிருந்தும் நீக்கப்பட்டுள்ளனர். 21 நாட்களாக அவர்களுக்கு வேலையில்லை வெளியூர் ஆட்கள் கொண்டுவரப் பட்டுள்ளனர்.

இதைக் கண்டிக்கும் முறையில் களப்பால் விவசாயிகள் ஆகஸ்ட் 15 சுதந்திர தினத்தன்று தங்கள் கோரிக்கைகளை முழக்கிக் கொண்டு ஊர்வலமும், பொதுக் கூட்டமும் நடத்தினர்.

விவசாயத் தொழிலாளிக்கு வேலை உத்திரவாதமும் கூலி உயர்வும் கோரி தீர்மானம் நிறைவேற்றினர். (ந. கி.)

## நகரத் தொழிற் சங்க கவுன்சில் மகஜர்

சென்னை நகரத் தொழிற்சங்கக் கவுன்சில் சார்பில் சென்னை நகரத் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தி தோழர்கள் டி. ஆர். கணேசன், எஸ், வி. கிருஷ்ணன், கே. கஜபதி, ஹரிபட், என். லோகநாதன், வி. பெருமாள், பி, ராமமூர்த்தி எம். எல். ஏ, முதலியோர் தொழில் மந்திரி பக்தவத்சலத்திடம் ஓர் மகஜர் சமர்ப்பித்தனர்.

கவுன்சில் தலைவர் டி. எஸ். ராமானுஜம் காரியதரிசி டி. ஆர். கணேசன் இருவரால் கையொப்பமிடப்பட்டுள்ள இம்மகஜர் விலைவாசி உயர்வு காரணமான நிலை—சம்பளத்துடன் பஞ்சப்படி இணைப்பு—சர்க்கார் இலாகா தொழிலாளர் குறைகள் பற்றிப் பல கோரிக்கைகளை முன் வைத்திருந்தது. பி. ஆர். அண்ட் சன்ஸ் ஜி. ஈ, சி. பிரஸ், ஹோட்டல் தொழிலாளர் உட்பட பல நகரத் தொழிற்சாலைகளைச் சேர்ந்த 500க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் ஊர்வலமாக வந்திருந்தார்கள்.

## சுதந்திர தினம் எட்டயபுரம்

கம்யூனிஸ்ட்டுக் கட்சியின் சார்பில் சுதந்திர தினம், தேசியக் கொடி ஏற்றி விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

## பலகட்ட விற்பனை வரிக்கு பலத்த எதிர்ப்பு

திருப்பூர், ஆக. 17—

பலகட்ட விற்பனை வரியை ஒரு கட்டமாக்க வேண்டுமென்று கோரி, இவ்வூர் வியாபாரிகள் சங்கம் சார்பில் இன்று காலை திரு. கே.என். பழனிச்சாமி எம்.எல்.சி. தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. பலகட்ட வரிக்கு தங்கள் எதிர்ப்பைக் காண்பிக்கும் வகையில் பகல் 1 மணி வரையில் எல்லா வியாபாரிகளும் கடையடைப்பு செய்தனர்.

ஈரோடு காளிதாஸ் சேட். பேசுகையில், சென்னையில் நடக்கும் சென்னை மாகாண மகாநாட்டுக்குப் பிற்பாடுகூட, பலகட்ட வரியை எடுக்காவிட்டால், அடுத்து வரும் பொதுத் தேர்தலில் ஆளும் கட்சிக்கு சரியான பாடம் கற்பிக்கப்போவதாகவும், வியாபாரிகளே தேர்தலில் நின்று ஸ்தானங்களைக் கைப்பற்றப்போவதாகவும், வியாபாரிகளைத் திருடர்கள் என அசெம்ளியில் மந்திரி பேசியதை வன்மையாகக் கண்டித்தும் பேசினார்.

காங்கிரஸ் சர்க்காரைக் குறை கூறி, தொழிலாளரிடம் பேசுவது போல் துஷ்பிரச்சாரம் செய்யக் கூடாது என்றார் தலைமை வகித்த பழனிச்சாமி கவுண்டர். கூடியிருந்த வியாபாரிகளெல்லாம் "தலைவருக்கு வியாபாரிகளின் கஷ்டம் தெரியாது. அரசாங்கத்தை விமர்சித்தது சரியே' எனக் கூறினார்கள்.

தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு, சென்னை மகாநாட்டுக்கு பிரதிநிதிகள் செல்ல முடிவு செய்யப்பட்டது.

## சம்பளக் கமிஷன் வேண்டும்

### பேங்கு சிப்பந்திகள் மகாநாடு

சென்னை, ஆக, 18—

தேசிய சம்பளக் கொள்கையை நிர்ணயிப்பதற்கு உடனே ஒரு சம்பளக் கமிஷன் நியமிக்க வேண்டுமென்று வலியுறுத்தி, ஒய், எம். சி. ஏ. மண்டபத்தில் நடைபெற்ற சென்னை ராஜ்ய பேங்க் சிப்பந்திகள் சம்மேளன மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சம்மேளனத் தலைவர். திரு. ஆர். வி. கிருஷ்ணமூர்த்தி தலைமை வகித்தார். 100-க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள்.

#### கிருஷ்ணமூர்த்தி

தலைவர் பேசுகையில் பேங்கு ஊழியர்களின் வாழ்க்கை செலவுகளைப் பற்றிய புள்ளி விவரங்கள் எடுக்க வேண்டுமென்றும், நாட்டிலுள்ள பேங்குத் தொழிலை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டுமென்றும் பேசினார்,

#### ஒன்று சேருக!

மேலும் பேசுகையில், தேசத்திலுள்ள தொழிற்சங்க மத்திய ஸ்தாபனங்களெல்லாம் ஒன்று சேர்ந்து, ஒரேயொரு அகில இந்திய தொழிற்சங்கமாக விளங்கி, நடுத்தர வர்க்கத்தின் நல்வாழ்வுக்குப் பாடுபட வேண்டுமென்று வேண்டுகோள் விட்டார்.

பொதுச்செயலாளர் திரு. பி. கே. ஜனார்த்தனம் பிள்ளை சமர்ப்பித்த அறிக்கையில் '1952ல் ஏழு சங்கங்களை இணைத்துநின்ற சம்மேளனம் இன்று 25 சங்கங்களையுடையதாயிருக்கிறதென்று பெருமைபடக் கூறினார்.

வேலைநிறுத்த காலத்துக்கு சம்பளம் தரவேண்டுமென்றும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேறின.

புது வருட நிர்வாகிகளாக திரு. ஆர். வி. கிருஷ்ணமூர்த்தி தலைவராகவும், திரு. வாசுதேவன், திரு. சங்கரநாராயண பிள்ளை உபதலைவர்களாகவும், பொதுச் செயலாளராக திரு. பி. கே. ஜனார்த்தனம் பிள்ளையும், உதவிக் காரியதரிசிகளாக திரு. என். சம்பத் ஆகியோரும், பொருளாளராக திரு. ஆர். சதாசிவனும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## விலைவாசி உயர்வைத் தடுக்க சர்வகட்சி கமிட்டி

திருமங்கலம் ஆக. 16—

விலைவாசி உயர்வைத் தடுப்பதற்காக சர்க்கார் அதிகாரிகளைக் கண்டு பேசி நடவடிக்கை எடுப்பதற்காகத் திருமங்கலத்தில் சர்வ கட்சிக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ தெய்வசுப்ரமண்யத் தேவர் (பிரஜா சோஷலிஸ்ட் கட்சி) தலைவராகவும், என். சின்னையன் (கம்யூனிஸ்ட்), இராசாக் (தி. மு. க.) காரியதரிசிகளாகவும், சோ. அருணாசலம் (சோஷலிஸ்ட் கட்சி) பொக்கிஷதாராகவும் அக்கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## விவசாயிகள் போராடியதால்

குமரப்ப நாய்க்கன்பேட்டை, ஆக. 15—

இவ்வூர் கம்யூனிஸ்டுக் கட்சியின் சார்பில் ஆர். என், சுப்ரமண்யம் தலைமை வகித்தார். தோழர் பி. புருஷோத்தமன் மக்கள் உண்மையில் சுதந்திரம் அனுபவிக்க வேண்டுமானால் பெருமுதலாளிகளின் ஆதிக்கத்தையும் நிலப் பிரபுக்களின் சுரண்டலையும் தடுக்கவேண்டும் என்றார். பின்னர் தோழர்கள் ஏகாம்பரம், எஸ். நடராஜன் பேசினர். கோடிக் கணக்கான விவசாய மக்களின் ஆதரவால்தான் இந்த நாடு சுதந்திரமடைந்தது என்றார், நடராசன்.

## கேட்டதோ நிலம் கிடைத்ததோ அபராதம்

சென்னை, ஆக. 17—

அரசியல் தியாகிகளுக்கு நிலம் வேண்டுமென்று கோரி, தடை உத்தரவைமீறி, அசம்பிளி மண்டபத்தின் முன் ஆர்ப்பாட்டம் செய்ய முயன்றதாக 7 அரசியல் தியாகிகளுக்கு ஏழாம் மாகாண மாஜிஸ்ட்ரேட், தலா 5 ரூபாய் அபராதம் விதித்தார். அபராதம் செலுத்த மறுத்ததால் 5 நாள் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. (ந. கி.)

## கீழப்பசலை சுதந்திர தினம்

விவசாயிகள் சங்கத்தின் சார்பில் எஸ். நாகுத் தேவர் தலைமையில் சுதந்திரத்தினம் கொண்டாடப்பட்டது. மேளத்தாளத்துடன் அரசாங்கக் கொடியும், செங்கொடியும் சேர்த்துப் பறக்கவிடப்பட்டன. வி. அய்யாபாமி, டி. பி. முத்தும் பேசினர்,

## முதன் மந்திரிக்கு யாதாஸ்து

சென்னை, ஆக. 17—

கோயமுத்தூருக்கு ஒரு பல்கலைக் கழகம் ஏற்படுத்தப்பட வேண்டுமென்று கோரி, கோவை நீலகிரி ஜில்லாக்கள் அதைச்சுற்றியுள்ள பிரதேசங்கள் ஆகியவற்றின் பிரமுகர்கள், சட்டசபை அங்கத்தினர்கள் ஆகியோர் அடங்கிய ஒரு கமிட்டியின் சார்பில் ஒரு யாதர்ஸ்து சென்னை முதன் மந்திரிக்கு சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

# சோஷலிஸ்ட் - கம்யூனிஸ்ட் கூட்டணி அவசியம்

## பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர் ப. சின்னத்துரையின் தெளிவுரை

"வகுப்புவாதக் கட்சிகளோடு எந்த உடன் பாட்டிற்கும் செல்வது சாத்தியமில்லை. அவைகள் ஏற்கனவே செல்வாக் கிழந்து மறைந்து கொண்டிருக்கின்றன. இந்திய நாட்டின் அரசியலில் மீண்டும் அவைகள் தலைதூக்க அனுமதிக்க முடியாது.

காங்கிரசுடன் தேர்தல் ஏற்பாடு செய்து கொள்ளும் பேச்சுக்கே இடமில்லை.

எஞ்சி நிற்பது முற்போக்கான இடதுசாரிக் கட்சிகள்தான்.

இவைகளில் பிரதானமானதாகவும், குறிப்பிடத்தக்க பொது ஜன ஆதரவைப் பெற்றுள்ளதும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான்.

அடிப்படை கொள்கையார்த்தமான மாறுபாடுகளினாலும், அதன் ருஷ்ய விஸ்வாசத்தாலும் இதுவரை கம்யூனிஸ்டுகளை காங்கிரஸ் கட்சியோடு வைத்து சமதூர எதிரிகளாக பாவித்து வந்தோம்.

ஸ்டாலினிஸ ஒழிப்பு, காமின்பார ஸ்தாபனத்தின் கலைப்பு, ஜனநாயக முறையில் நம்பிக்கை தெரிவித்திருப்பது ஆகியவைகள் கம்யூனிஸ்டுகளிடையே புதிய மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது என்ற போதிலும், அது இன்னும் ஸ்திரமான கட்டத்தை அடையவில்லை என்பது ஒருபுறமிருக்க, ஜனநாயக சோஷலிஸ்டுகளுக்கும், கம்யூனிஸ்டுகளுக்குமிடையே இருந்துவரும் தத்துவார்த்த மாறுபாடுகள் நீங்கிவிடும் சாத்தியக் கூறுகள் இப்போதைக்கு இல்லை.

ஆனால் அவைகள் தேர்தல் ஏற்பாடுகளுக்குத் தடையாக நிற்க வேண்டியதில்லை.

அநீதிகளையும், கொடுமைகளையும் எதிர்ப்பதில் மக்களின் உரிமைகளுக்காகப் போராடுவதில் போராடும் உரிமை ஒரு கட்சிக்கு மட்டும் தனிப் பட்டயமாக ... இருக்க முடியாது. இந்த போராட்டங்களில் கலந்து கொள்ள முன்வரும் எவரையும் தடுக்கும் உரிமையையும் எவரும் எடுத்துக்கொள்ள முடியாது.

இதைச் சமீப கால அனுபவம் நிதர்சனமாக நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. காங்கிரஸ் அரசாங்கத்தின் அநீதிகளையும், கொடுமைகளையும் எதிர்த்து நடத்திய போராட்டங்களில் சோஷலிஸ்டுகள் தனியாக நிற்கவில்லை. அந்தப் போராட்டங்களிலே கம்யூனிஸ்டுகளும் மற்ற இடதுசாரிக் கட்சிகளும் சோஷலிஸ்டுகளுக்கு எந்த வகையிலும் குறையாத சமதையான அளவில் நின்று போராடினார்கள்.

நிலவெளியேற்றத்தை எதிர்த்தும், ஆள் குறைப்பையும் வேலைப்பளுவை எதிர்த்தும், விலைவாசி உயர்வை எதிர்த்தும், வயல்களிலும் பாக்டரிகளிலும் நகரப் புறங்களிலும் நடந்த போராட்டங்களில் சேர்ந்து நின்றோம்.

இன்று நாட்டில் நிலவும் விசேஷ சூழ்நிலைகளின் நிர்ப்பந்தத்தால் இதே ரீதியில் தேர்தல் போராட்டத்திலும் சோஷலிஸ்ட்கள் தங்களை எந்த முறையிலும் தாழ்த்திக் கொள்ளாமல் கம்யூனிஸ்ட் கட்சி உள்ளிட்ட மற்ற இடதுசாரிக் கட்சிகளோடு சேர்ந்து போராட வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

இதில் பயந்து பின்வாங்க ஒன்றுமில்லை. தத்துவார்த்தமான வாதப் பிரதிவாதங்கள் செய்து கொண்டிருப்பதற்கான சமயமல்ல இது.

இதில் சோஷலிஸ்ட்கள் எந்த அளவுக்கு விவேகமான, யதார்த்த நிலைமைக்கேற்ற முடிவை எடுத்துக் கொள்ளப் போகிறார்கள் என்பதை பொதுமக்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்திய சோஷலிஸத்தின் எதிர் காலமும், நாட்டின் முன்னேற்றமும், ஜனநாயக வாழ்வும் சோஷலிஸ்ட்கள் எடுத்துக் கொள்ளப் போகும் முடிவையே பெரிதும் பொறுத்திருக்கிறது."

"சமுதாயம்", 19-8-56

## ஊழல்! திட்டம் நிறைவேற்றும் லட்சணம்!

புதுடெல்லி. ஆக. 17—

தாமோதர் பள்ளத்தாக்கு திட்ட வேலையில் ஈடுபட்டிருக்கும் அதிகாரிகள் பொது அறிவிப்பு (டெண்டர் இல்லாமலேயே) ரூ. 7 லட்சத்து 40 ஆயிரம் பெருமானமுள்ள வேலை செய்திருப்பதாகக் கணக்கு எழுதி இருக்கிறார்கள்.

## சாகுபடியாளர் பாதுகாப்பு திருத்த மசோதாவுக்கு அனுமதி

சென்னை, ஆக. 18—

திரு. என். கே. பழனிச்சாமி பிரேரேபித்த சாகுபடியாளர் பாதுகாப்பு திருத்த மசோதாவுக்கு சட்டசபை அனுமதியளித்தது. மசோதா கெஜட்டில் வெளியிடப்பட்டு முறைப்படி விவாதத்திற்கு வரும்.

## சிதம்பரம் தாலுகாவில் 32 விவசாயிகள் கைது!

### முதன் மந்திரிக்குத் தந்தி

சிதம்பரம், ஆக. 17—

சிதம்பரம் தாலுகா, குமவன் பேட்டை கிராமத்தில் கூலிப் போராட்டம் காரணமாக இதுவரை மொத்தம் 32 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். இவர்களில் 10 பேர் பெண்கள் ஒரு மாத கை குழந்தையுடன் ஒரு தாயாரும் இதில் உண்டு. இவர்கள் மீது இ. பி. கோ. 147, 148, 151 செக்ஷன்களின் கீழ் குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

மலபார் ஸ்பெஷல் போலீசின் மிருகத்தனமான செய்கைகளுக்கு பயந்து பலர் கிராமத்தை விட்டே வெளியேறி விட்டனர்.

இந்த விபரங்களை விவசாயிகள் தந்திமூலம் முதன் மந்திரிக்கும் தெரியப்படுத்தியுள்ளனர்.

(ந. நி.)

# தமிழ் மேதை வேதநாயகனார் விழா

சென்னை, ஆக. 17—

19-ம் நூற்றாண்டில் உரைநடை, தமிழ் இசை, நாவல், பெண்ணுரிமை, சர்வமத சமரசம், பொதுத் தொண்டு ஆகிய பல துறைகளிலும் பணிபுரிந்த தமிழரின் முன்னோடியாக விளங்கிய மாயூரம் நீதிபதி ச. வேதநாயகம் பிள்ளை அவர்களின் நினைவாக அவரது பேரர் திரு. வே. ஞா. ஆரோக்கியசாமி அவர்கள் சென்னை ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றத்தில் விழா நடத்தினர். உயர்திரு. மயிலை. சீனி வேங்கடசாமி அவர்கள் தலைமை வகித்தார்.

திரு. இரா. நெடுஞ்செழியன், பேராசிரியர் க. அன்பழகன், திரு. மா. சு. சம்பந்தம் முதலியவர்கள் வேதநாயகனாரைப் போற்றி சொற்பொழிவாற்றினர்கள்.

ஜனசக்தி உதவி ஆசிரியர் ஐ. மாயாண்டி பாரதி பேசுகையில், "வேதநாயகனார் தொழில்வளர்ச்சி துளிர்விட்டுக் கொண்டிருந்த காலத்தில் வாழ்ந்தாரென்றும், நிலப்பிரபுத்வ சமுதாய பழக்க வழக்கங்களை எதிர்த்தும், ஆங்கில மோகத்தை எதிர்த்தும் போராடியதுடன், தனவந்தர்களின் பேராசையை, கேலி செய்து கண்டித்தாரென்றும்,

ஊரில் நம்மிருப்பிடம்
ஒரு முழமட்டே
பாரிலே நமக்கேன்
பல மனைக்கட்டே
மண்டலத்தில் நமக்கு
வயிறெரு குதிரா
கண்டபடி உண்ண நாம்
கபந்தனுக் கெதிரா ?
பூதமானாலும் உண்ண
போது மாகாணி
ஆதலால் நமக்கேன்
ஆயிரம் காணி.

என்பன போன்ற பாடல்களால் கிண்டல் பண்ணி குத்தினாரென்றும், இப்பாடல்கள் ஏழையர் இயக்கத்துக்கு உதவியாக இருக்கிறதென்றும், மற்றும் பல மேற்கோள்களுடன் பேசி முடித்தார்.

தலைவர் நன்றியுரை கூறி வேதநாயகனாரின்பேரனார் திரு. ஆரோக்கியசாமியை அறிமுகப்படுத்தி வைத்தார். (ந. நி.)

## தினசரி விழாவில் நூலகத் திறப்பு விழா

திருப்பூர், ஆக. 15—

ஜனசக்தி தினசரி விழா தினத்தன்று திருப்பூர் சித்து நகரில் தியாகி களப்பால் குப்புசாமி நினைவு நூலகத்தை திருப்பூர் மில் தொழிலாளர் சங்கத் தலைவர் ஏ. கணபதி திறந்து வைத்தார்.

## இராசிபுரத்தில் இரவு பாடசாலை

கோவை, ஆக. 15—

சுதந்திர தினத்தன்று இராசிபுரம் (கோவை ஜில்லா) ஐக்கிய முன்னணி வாசக சாலையின் சார்பில் ஆர். ஏ. லக்ஷ்மணன் தலைமையில் இரவு பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது.

## நிலத்திலிருந்து வெளியேற்ற விடோம்!

சத்தியமங்கலம், ஆக. 16—

இல்லூர் பெரிய மிராசுதாரரும், பேங்கருமான கோபால சாஸ்திரிக்கு சொந்தமான 4½ ஏக்கர் நஞ்சை நிலத்தில் கடந்த 6 வருடமாக உழுது பயிர் செய்து வந்த வேட்டவன் புதூர் ராமண கவுண்டர் என்ற விவசாயியை நிலத்தை விட்டு வெளியேற்ற, அந்தமிராசுதார் செய்த முயற்சி பலிக்கவில்லை.

100 பெண்களுடன், வேட்டவன் புதூர் விவசாயிகள் 20-க்கு மேற்பட்ட ஏர்களையும் பூட்டிக் கொண்டு மேற்படி நிலத்திற்குச் சென்று, நிலத்தில் செங்கொடி நாட்டி, உழுது விட்டு, ஜெய கோஷத்துடன் வீடு திரும்பினர்.

## கொடிக்கால் விவசாயிகளுக்கு நிலம்

மதுரை, ஆக. 17—

விவசாய பாதுகாப்புச் சட்ட திருத்த மசோதாவை பரிசிலனை செய்யும் சட்டசபை பொறுக்குக் கமிட்டிக்கு, தமிழ்நாடு கொடிக்கால் விவசாயிகள் சங்கப் பொதுக்காரியதரிசி எஸ். சூர்யநாராயணன் இன்று ஒரு மகஜர் அனுப்பியுள்ளார். அதில் அவர்: "உத்தேச சட்டம் தமிழ்நாட்டில் வாழ்ந்து வரும் சுமார் 10 லட்சம் கொடிக்கால் விவசாயக் குடும்பங்களை பாதித்து வேலையில்லாத் திண்டாட்டத்தில் கொண்டுபோய்விடுமென்றும், ஆகவே கொடிக்கால் விவசாயிகளுக்குப் பயிரிட நிலம் கிடைக்குமாறு, அம்மசோதாவில் பொறுக்குக் கமிட்டி தகுந்த திருத்தங்கள் செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டுள்ளார்.

## திரு-கொச்சி கைத்தறி நெசவாளர் மகாநாடு

திரு-கொச்சி கைத்தறி நெசவாளர் சம்மேளனத்தின் முதல் மகாநாடு ஆகஸ்ட் 22, 23 24 தேதிகளில் கொல்லத்தில் நடைபெறுமென்று, அதன் வரவேற்புக் கமிட்டி பொதுக்காரியதரிசி ஸ்ரீ கே. எஸ். ஆனந்தன் அறிவிக்கிறார்.

# மத்திய சர்க்கார் சிப்பந்திகளின் மஹா சம்மேளனம்

## 9 சம்மேளனங்களின் இணைப்பு

புது டில்லி, ஆக. 17—

மத்திய சர்க்கார் ஊழியர்களின் 9 அகில இந்திய சம்மேளனங்கள், இன்று ஒரே மஹா சம்மேளனத்தில் இணைவதென்று தீர்மானம் செய்தன.

தபால் தந்தி தொழிலாளர் சங்கம், சென்ட்ரல் பி. டபிள்யூ. டி. தொழிலாளர் சங்கம், சிவில் ஏவியேஷன் தொழிலாளர் சங்கம், இந்திய மெட்டலார்ஜிகல் என். ஜி. ஓ. சங்கம், சர்வே ஆப் இந்தியா 3-ம் வகுப்பு ஊழியர் சங்கம், இந்திய மெட்டலார்ஜிகல் ஒர்க்ஷாப் யூனியன், சபார்டினேட் ஆபீஸர் யூனியன், வருமான வரி மந்திரிசபை ஊழியர் அசோஷியேஷன் முதலியன மஹா சம்மேளனத்தில் இணைந்துள்ளன. அமைப்புக் கூட்டத்தில் 150 பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள்.

தலைமை வகித்த ஸ்ரீ சாரங்கதர் தாஸ் எம். பி. பேசுகையில், ரயில்வே தொழிலாளர் சம்மேளனமும், பாதுகாப்பு தொழிலாளர் சங்கமும் இணையுமென நம்புவதாகக் கூறினார்.

ஸ்ரீ சாரங்தர் பேசுகையில், மத்திய சர்க்காரின் கீழ்த்தர சிப்பந்திகளின் வாழ்க்கை நிலைமையை உயர்த்தவேண்டுமென்றும், இல்லையேல் 2-வது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற மனப்பூர்வமாக ஈடுபடமாட்டார்களென்றும் எச்சரித்தார்.

சம்பளக் கமிஷன் நியமிக்குமாறு சர்க்காரை வற்புறுத்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஸ்ரீ சாரங்தர் தலைவராகவும், ஸ்ரீ மதுசூதன் பொதுக்காரியதரிசியாகவும் கொண்ட மஹா சம்மேளனம் (கான்பெடரேஷன்) அமைக்கப்பட்டது.

## கவர்னர் குமாரசாமிராஜா ராஜினமா

புதுடில்லி ஆக. 16—

ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் கவர்னராயிருந்து வந்த ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, ராஜினமா செய்துள்ளார். உடல் நலக் குறைவு காரணமென்று கூறப்படுகிறது.

# சலவைத் தொழிலாளர் மகாநாடு

சென்னை, ஆக. 17—

சென்னை ஜில்லா சலவை தொழிலாளர் மகாநாடு சைதாப்பேட்டையில் திரு. எம். எத்திராஜ் தலைமையில் இன்று நடைபெற்றது. நிதி மந்திரி சி. சுப்ரமண்யம் பேசுகையில், மூதாதையர்களின் தொழிலைச் செய்து வருவதால் ஏற்றத் தாழ்வு ஏற்பட்டிருக்கிறது. அந்தத் தொழில்களை அபிவிருத்தி செய்து வருமானத்தை அதிகப்படுத்தினால்தான் பிரச்னையைத் தீர்க்க முடியும். வருமானத்தில் ஏற்றத்தாழ்வு குறைந்தால், மற்றத் துறைகளில் ஏற்றத் தாழ்வு தானே குறைந்துவிடும். பரீட்சார்த்தமாக சென்னையில் கூட்டுறவு சங்கம் அமைத்தால், அதற்கு சர்க்கார் உதவி செய்யும்" என்றார்.

கொடியேற்றி வைத்த மேயர் ஸ்ரீ ராமநாதய்யர், நகரில் பல பகுதிகளில் சலவைத் துறைகள் அமைக்க நகர சபை உத்தேசித்திருப்பதாகத் தெரிவித்தார்.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ பெருமாள் பேசுகையில், சென்னை ஜில்லாவில் 10,000 சலவைத் தொழிலாளர் இருப்பதாகவும், விசை லாண்டிரிகளின் போட்டியால் அவர்கள் கஷ்டப்படுவதாகவும் கூறினார்.

### தீர்மானங்கள்

1. சலவைத் துறைகளை அதிகரிக்க வேண்டும்; அபிவிருத்தி செய்யவேண்டும்,

2. சலவைத் தொழிலாளர்கள் சொந்தமாக லாண்டிரி ஆரம்பிக்க வசதியளிக்கும் பொருட்டு 10 வருஷங்களுக்கு லைசென்ஸ் கட்டணத்திலிருந்து விதிவிலக்களிக்க வேண்டும்.

3. நகரசபை பள்ளிகளில் சலவையாளரின் குழந்தைகளுக்கு இலவச மத்யான உணவு தர வேண்டும்.

5. சலவைத் தொழிலாளருக்கு காலனி வசதி, எஸ். எஸ். எல். சி. வரை கல்விச் சலுகை முதலியன தரவேண்டும்.

மற்றும் பலர் பேசினார்கள்.

# போதிய பணம் ஒதுக்க போராடுக!

## டாக்டர்களின் கோரிக்கை

வேலூர், ஆக. 17—

வட ஆற்காடு ஜில்லா எல். ஐ. எம். டாக்டர்களின் மகாநாடு இங்கு நடந்தது. சுதேசி மருத்துவத்தை வளர்ப்பதற்காக இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள ரூ. 5½ கோடியில் சென்னை ராஜ்யத்திற்கு போதிய அளவு பணம் ஒதுக்கவேண்டுமென்று சென்னை சர்க்கார் போராட வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றினர். வேலூரில் ஒரு இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகம் ஏற்படுத்த வேண்டுமென்றும் கோரினர்.

## விசைத்தறிக்கு எதிர்ப்பு

அனகாபுத்தூர், ஆக. 14—

காஞ்சி மகாநாட்டு முடிவுகளையும், மந்திரி பக்தவத்சலம் அளித்த பதிலையும் விளக்கி பட்டிமார்ப்பு கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்க சார்பில் திரு சி. ராமலிங்கம் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில். கே. எஸ். பார்த்தசாரதி, எம். ஆறுமுகம், டி. எஸ். அர்த்தநாரி எம். எல். ஏ. முதலியோர் பேசினர்.

சட்டசபையிலே

# ஆந்திர தமிழக எல்லை

## சுமுகமாகத் தீர்க்க

### ராமமூர்த்தி-சுப்பிரமண்யம் வேண்டுகோள்

சென்னை, ஆக. 18—

ஆந்திரா—சென்னை ராஜ்ய எல்லைப் பிரச்சினையை சுமுகமாகத் தீர்த்து வைக்கத் துரிதமான நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று சென்னை சட்டசபையில் இன்று மீண்டும் வலியுறுத்தப்பட்டது. இதுபற்றி சட்டசபை எதிர்க் கட்சித் தலைவர் பி. ராமமூர்த்தி பேசுகையில் துரதிருஷ்ட வசமாக சம்பிரதாயத்திற்கு மாறான வகையில் ஆந்திர கவர்னருடைய பேச்சைப் பற்றி சென்னை சட்டசபையில் விவாதிக்க நேர்ந்ததையும், இப்பேச்சுகளை ஆந்திர முதன் மந்திரி தவறாக எடுத்துக்கொண்டுள்ளதையும் குறிப்பிட்டார்.

ஆந்திரா—சென்னை எல்லைப் பிரச்சினை ஆரம்ப முதலே தனியான ஒரு நிலையில் இருந்திருப்பதையும், இதை ராஜ்யப் புனரமைப்புக் கமிஷனும் ஆந்திர சர்க்காரும் அங்கீகரித்திருக்கிறார்கள் என்றும், ஆந்திர ராஜ்ய அமைப்பு எப்படி மொழிவாரி ராஜ்ய அமைப்புக்கு முன்னோடியாகத் திகழ்ந்ததோ அதேபோல இந்த எல்லைப் பிரச்சினைக்குத் தீர்வுகாணும் விஷயத்திலும் முன்மாதிரியாக இருக்கவேண்டும் என்றும் குறிப்பிட்டார். ஓர் எல்லைக் கமிஷனை நியமிப்பதாக இந்தியப் பிரதமர் அளித்துள்ள வாக்குறுதியையும் ராமமூர்த்தி நினைவுபடுத்தினார்.

எல்லைப் பிரச்சினையை விரைவாகவும் சுமுகமாகவும் தீர்க்க விரும்புவதாக ஆந்திர முதன் மந்திரி தம்பேச்சில் காட்டியுள்ள எண்ணத்தை வரவேற்றார் நிதி மந்திரி சுப்ரமண்யம். ஆந்திர பிரிவினையே ஒரு தனி விஷயமாக வந்தது எனவும், இரு ராஜ்யங்களுக்கிடையேயுள்ள எல்லைப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதும் தனி விஷயமே எனவும் இந்தியப் பிரதமரும் உள் விவகார மந்திரியும் ஒப்புக்கொண்டிருப்பதையும் திரு. சுப்ரமண்யம் எடுத்துக் கூறினார். இரு அண்டை ராஜ்யங்களிடை நட்புறவை நிலைநாட்டவும், எல்லைப் பகுதியிலுள்ள மக்கள் நலவுரிமைகளை நிர்ணயமாகப் பாதுகாக்கவும் இப்பிரச்சினைக்கு ஏற்கெனவே கொடுக்கப்பட்டுள்ள உறுதி மொழிகளின் அடிப்படையில் துரிதமாகத தீர்வுகாணவேண்டும் என்று குறிப்பிட்டார்.

### பொதுத் தேர்தலில் குறிபோடும் முறை

#### சென்னை நகரில் திணிக்க முடிவு!

சென்னை, ஆக. 18—

பொதுத் தேர்தலில் அபேட்சகர்கள் பெயர் முன் அடையாளம் போட்டு அதற்குமுன் குறிபோடும் முறை சென்னை நகரத்தில் மட்டும் அமுல் செய்யப்படும் என்று சட்டசபையில் நிதிமந்திரி சுப்ரமண்யம் அறிவித்தார்.

### மலபார் எம். எல். ஏ.க்களுக்கு அநீதி!

சென்னை, ஆக. 18—

புதிய கேரள ராஜ்யம் அமைக்கப்படும்பொழுது கேரள எம். எல்.ஏ.க்களும், திரு-கொச்சி எம்.எல்.ஏக்களுமடங்கிய சட்டசபை செயல்படவும், ஜனநாயக அடிப்படையில் மக்கள் பிரதிநிதிகளின் சர்க்கார் நடக்கவும் சந்தர்ப்பமளிக்கவேண்டும் என்று மத்திய சர்க்காரிடம் சிபார்சு செய்யும் பிரேரணை ஒன்றை டி. வி. நாராயணன் நம்பியார் சட்டசபையில் கொண்டுவந்தார். ராஜ்யப் புனரமைப்புக்குப் பின்னால், கர்னாடக மெம்பர்கள் மைசூர் சட்டசபையிலும், திரு-தமிழக மெம்பர்கள் சென்னை சட்டசபையிலும் இருப்பார்கள்.

இந்த நியாயம் மலபார் எம். எல். ஏக்களுக்கு இல்லையா, திருகொச்சியில் காங்கிரஸல்லாத ஆட்சி ஏற்படும் என்ற அச்சமா? என்று கணாரன் கேட்டார். நிதி மந்திரி பிரேரணையை எதிர்த்தார். வாக்கெடுப்பில் பிரேரணை நிராகரிக்கப்பட்டது.

### சுயமரியாதைவிவாகங்களை செல்லுபடியாக்க சட்டம் வரும்

சென்னை ஆக. 18—

இதுவரையில் நடந்துள்ள சுயமரியாதை மணங்களைச் செல்லுபடியாக்கும் விரிவான சட்டம் ஒன்று சர்க்காரே கொண்டுவரும் என்று நிதி மந்திரி சட்டசபையில் வாக்களித்ததை ஒட்டி திரு. ரங்கசாமி ரெட்டியார் தமது மசோதாவை வாபஸ் பெற்றுக் கொண்டார்.

### மந்திரியிடம் மகஜர்

சென்னை ஆக. 18—

மதுரை ஹார்வி மில்லில் நிர்வாகத்தால் பழிவாங்கப்பட்ட 160 தொழிலாளர்கள் சார்பில், அவர்களை மீண்டும் வேலையில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்த தோழர் பி. ராமமூர்த்தி எம். எல். ஏ, எஸ். காமராஜ் நகர சபை கவுன்சிலர், தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் செயலாளர் எஸ். கிருஷ்ணமூர்த்தி, கே. எம். சுந்தரம் முதலியோர் தொழில் மந்திரி எம். பக்தவத்சலத்தைப் பேட்டி கண்டார்கள். மந்திரி இப்பிரச்னையைக் கவனித்து ஆவன செய்வதாகக் கூறினார்.

●

சென்னை, ஆக. 18—

சென்னை நகர கார்ப்பொரேஷன் தொழிலாளர் சம்பள உயர்வு முதலிய கோரிக்கைகள் அடங்கிய மகஜர் ஒன்றை எம். கலியாணசுந்தரம் எம். எல். ஏ. தொழில் மந்திரியிடம் சமர்ப்பித்தார். பி. கருப்பண்ணன் வெங்கடேஸ்வரலு முதலியோர் தலைமையில் தொழிலாளர் திரண்டு வந்திருந்தார்கள்.

## சீன இந்திய நட்புறவு

### சூ என்-லாய் பாராட்டு

பீக்கிங், ஆக. 17—

கால காலமாகப் பேணப்பட்டு நீடித்து வரும் சீன இந்தியா நட்புறவு இன்று நடைமுறையில் பரஸ்பர உதவி கூட்டுறவுக்காக எடுக்கப்பட்டுவரும் நடவடிக்கைகளின் விளைவாகப் புதிய முக்கியத்துவமும் புதிய உள்ளடக்கமும் பெற்றுவருகின்றன என்று பீகிங்கில் இந்தியஸ்தானிகர் திரு. ஆர். கே. நேரு அளித்த விருந்தில் பேசும்பொழுது சீனப் பிரதமர் சூஎன்லாய் கூறினார். பொது நலத்திற்காக பரஸ்பரம் அனுபவங்களை இருநாடுகளும் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிட்டார். சீனாவில் உள்ள விவசாயத் திட்டம் தொழில் நுட்பம் கூட்டுறவு பற்றி அறிந்து கொள்ள சீனாவுக்கு விஜயம் செய்துள்ள தூதுகோஷ்டிகளுக்கு இந்தியஸ்தானிகரால் இவ் விருந்து அளிக்கப்பட்டது.

### சோவியத் இந்தோனேஷியா வர்த்தக ஒப்பந்தம்

ஜகர்த்தா ஆக. 18—

இந்தோனேஷியாவுக்கும் சோவியத் யூனியனுக்கும் இடையே முதல் வர்த்தக ஒப்பந்தம் நேற்று கையொப்பமிடப்பட்டது. இந்தோனேஷியா சார்பில், சுபந்திரினோவும், சோவியத் சர்க்கார் சார்பில் உதவி வர்த்தக மந்திரி ஸெமிசஸ்ட்னாவும் கையொப்பமிட்டனர். இந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் இந்தோனேஷியா ரப்பர், காப்பி, கொக்கோ, மிளகு, புகையிலை, சர்க்கரை கொப்பரை முதலிய பொருள்களை ஏற்றுமதி செய்யும், தொழிற்சாலை யந்திரங்கள் தொழில் நுட்பத் தளவாடங்களை சோவியத் யூனியனிடமிருந்து பெறும்.

### இருமொழி பம்பாய் அமைப்பு வேண்டாம்

#### மகாராஷ்டிரா பி-சோ. கட்சியின் எதிர்ப்பு

ஆமதாபாத், ஆக 18—

இருமொழி பம்பாய் அமைப்பு கூடாதென்றும், ஒரு மொழி பேசும் சம்யுக்த மகாராஷ்டிரம் அமைக்கப்படவேண்டுமென்றும் கோரி மகாராஷ்டிரா பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியின் நிர்வாகக் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

### சினிமாப் படங்களின்மேல் புதுத் தாக்குதல்

## அரசாங்கத்திற்கு அதிக அதிகாரங்கள்!

### முற்போக்குக் கருத்துக்களை தடைசெய்ய சதியா?

புதுடெல்லி, ஆக. 17—

திரைப்படங்கள் பற்றிய தனிநபர் தீர்மானம் ஒன்றை இன்று மக்கள் சபையில் சென்னையைச் சேர்ந்த சி. ஆர். நரசிம்மன் கொண்டுவந்தார். தேசிய ஒற்றுமை, சமூக முன்னேற்றம் ஆகியவற்றின் நலன்களைக் காப்பது என்ற பெயரால், சர்க்காருக்கு அதிக அதிகாரங்களை வழங்க இந்தத் தீர்மானம் கோரிற்று.

விளம்பர இலாகா மந்திரி டாக்டர் கேஸ்கர் இந்தத் தீர்மானத்தை வரவேற்கையில், இன்று நாட்டில் சினிமா, இளைஞர்கள்மீது அதிக ஆதிக்கம்செலுத்துகிறது. எனவே, அதை மேலும் அபிவிருத்தி செய்து 'சுதந்தரத்'தையும் உயர்த்துவது தேசத்திற்கும் சமூகத்திற்கும் முக்கியமாம் என்று கூறுகிறார் கேஸ்கர்.

அதோடு தேசிய பிலிம் போர்டு ஒன்றை நிறுவ மக்கள் சபையின் அடுத்த கூட்டத்தில் 'மசோதா ஒன்றை அரசாங்கம் கொண்டு வரப் போவதாகவும், இந்தப் போர்டு படம் வெளிவருவதற்கு முன்பே கதை, வசனத்தைத் தணிக்கைசெய்யும் என்றும் பயமுறுத்துகிறார். நரசிம்மனின் தீர்மானம் சபையில் நிறைவேறியுள்ளது.

## நாடெங்கிலும் சுதந்திர தின விழா

### சென்னையில்

சென்னை. ஆக. 15—

ராயப்பேட்டை மக்கள் மறுமலர்ச்சி மன்றத்தில் ஆகஸ்ட் 15ந் தேதி காலை 8 மணிக்கு தோழர் எஸ். தாமோதரம் தேசியக் கொடியை ஏற்றி வைத்தார். தோழர்கள் எம். பச்சையப்பன், து. மாதவன் முதலியவர்கள் சுதந்திரத்தின் பெருமையை விளக்கிப் பேசினார்கள்.

தாம்பரம், ஆக, 16—

தாம்பரம் நகர் நலக் கமிட்டி, கஸ்தூரிபாய் நகர் கிளையின் சார்பில் ஆகஸ்ட் 15-ல் சுதந்திர தின விழா கொண்டாடப்பட்டது. காலையில் தோழர் ப. ஜீவானந்தம் எம். எல். ஏ. தேசியக் கொடியேற்றுவித்தார். மாலையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திற்கு திரு. எம். வரதராஜன் தலைமை வகித்தார். திரு. எத்திராஜன், தோழர் ஜீவா ஆகியோரர் சுதந்திர தினத்தின் முக்யத்வம்பற்றியும், 2-வது ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிபெற, சர்க்கார் மக்களின் கஷ்டங்களைத் தீர்க்க வேண்டுமென்றும் பேசினர். (ந. நி)

### அரசியல் கைதிகளை விடுதலை செய்க

#### சுதந்திர தினத்தில் தீர்மானம்

மதுரை, ஆக, 16—

மதுரை நகர் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் ஆகஸ்ட் 15-ந் தேதியன்று நடைபெற்ற சுதந்திர தினப் பொதுக்கூட்டத்தில், சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கூட்டத்திற்குத் தோழர் எஸ். குருசாமி தலைமை வகித்தார். தோழர் கே. டி. கே. தங்கமணி பேசுகையில் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காக்க பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றார்.

அன்று காலையில் கட்சிக் காரியாலயத்தில் தேசியக் கொடி ஏற்றுவிக்கப்பட்டது. (ந.நி.)

### சிவகங்கையில்

விக்கிரமசிங்கபுரம் ஆக. 16—

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற சுதந்திர தின விழாவில் ஸ்தல பஞ்சாயத்து போர்டு தலைவர் தோழர் ஆர். வி. அனந்த கிருஷ்ணன் தேசியக் கொடியை ஏற்றி வைத்தார். தோழர் வி. செல்லையா கம்யூனிஸ்ட் கொடியை ஏற்றி வைத்தார்.

கம்யூனிஸ்ட் தலைவர் டி. பழனிச்சாமி தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் வி. செல்லையா, ஆர். வி. ஏ. முதலியவர்கள் பேசினர்.

### பொள்ளாச்சியில் கொட்டும் மழையிலும்

கொட்டும் மழையிலும், கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் எல். பழனிச்சாமி தலைமையில் சுதந்திரதின ஊர்வலம் நடத்தினர்கள்.

### சிவகிரி

சங்கரன் கோவில் தாலுகா சிவகிரியில் தோழர். டி. பாண்டியன், பஞ்சாயத் போர்டு வைஸ் சேர்மேன் திரு. ஜி. செல்லப் பாண்டியத் தேவர் (காங்கிரஸ்) காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. ராஜாத் தேவர் முதலியவர்கள் தேசியக் கொடி ஏற்றிவைத்துப் பேசினார்கள். சர்க்கார் அதிகாரிகள், பள்ளிமாணவர்கள் அடங்கிய ஊர்வலம் நடைபெற்ற பிறகு திரு. ஏ. கோபாலன் (காங்கிரஸ்) நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்க வேண்டியதின் அவசியத்தைப் பற்றிப் பேசினார்.

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர். பாண்டியன் தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர்கள். எம். பாண்டியன், கே. செல்லையா முதலியவர்கள் பேசினார்கள்.

### விஸ்வநாதப் பேரி

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர். வீரசாமி நாயுடு தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர். கே. செல்லையா சுதந்திர வரலாறு குறித்துப் பேசினார்.

### நாகர்கோவிலில்

வடசேரியில் மாதர் முன்னேற்ற சங்கத்தின் சார்பில் திருமதி. பார்வதி தலைமையில் திருமதி. கமலம் தேசியக் கொடியை ஏற்றுவித்தார். தோழியர் விசாலம் சுதந்திரம் போராட்டத்தில் பெண்கள் வகித்த பங்கை விளக்கினார்.

மாணிக்கவாசகபுரத்தில் திருமதி. விசாலம், திரு. ஜேம்ஸ், தோழர். ரெங்கநாதன் முதலியோர் பேசினார்கள்.

### மாயூரம்

கம்யூனிஸ்டுக் கட்சியின் சார்பில் பொதுக்கூட்டம் தோழர் டி. நாராயணசாமி தலைமையில் நடந்தது. கே. ஆர். ஞானசம்பந்தம், எஸ், கோவிந்தராஜன். கோ. வி. பாரதி மோஹன் அடைந்த சுதந்திரத்தை மக்களுக்குப் பயன்படத் தக்க முறையில் உபயோகப்படுத்துவதின் அவசியத்தை வற்புறுத்தினர்.

### பல ஊர்களில்

ஆகஸ்ட் 15-ந் தேதியன்று சுதந்திர தினக் கொண்டாட்டம் செங்கோட்டை நகரம், தஞ்சை சந் தொழிற்சங்கங்கள், கண்டரமாணிக்கம் வி. ச., தங்கவயல் கம்யூனிஸ்ட் கட்சி, வேலாண்டிபாளையம் கலாமன்றம். ஒக்கர் பாளையத்தில் காங்கிரஸ் கம்யூனிஸ்ட் கட்சி வி. ச. கூட்டு சார்பில் நடைபெற்றதாகச் செய்திகள் கிடைத்துள்ளன.

### கட்டிடத் தொழிலாளருக்கு 8 மணி நேர வேலை!

சிரநாயக்கன்பாளையம், ஆக. 17—

இவ்வூர் எலிமெண்டரி போர்டு பாடசாலையில் சிரநாயக்கன்பாளையம் கிராம நலக் கமிட்டியின் சார்பில் நஞ்சப்ப செட்டியார் தலைமையில் சுதந்திர தினம் சிலம்பம் கோலாட்டம் போன்ற ஆட்டபாட்டங்களுடன் கொண்டாடப்பட்டது. மாலை நடந்த பொதுக்கூட்டத்தில் தியாகிகளுக்கு வணக்கஞ் செலுத்திய பின் கட்டட இலாக்காத் தொழிலாளர்களுக்கு 8மணி வேலைமுறை கொண்டுவர வேண்டும் என்று கோரித் தீர்மானம் நிறைவேறியது.

## ரூ. 169 லட்சமாம்! பிரிட்டிஷ் முதலாளிக்கு!

### நஷ்டஈடா? நாசத் திட்டமா?

புது டில்லி, ஆக. 15—

கோலார் தங்கச் சுரங்கங்களை தேசிய உடைமை ஆக்குவதென்று மைசூர் சர்க்கார் தீர்மானித்தது. சுரங்கச் சொந்தக்காரர்களான ஜான் டெய்லர் கம்பெனி முதலில் 6 கோடி ரூபாய் நஷ்டஈடு கேட்டது. பிறகு 2 கோடி வேண்டுமென்றது.

ரூ. 65 லக்ஷமே கொடுக்க முடியுமென்றும், அதற்குமேல் கொடுத்தால் மைசூர் ராஜ்யப் பொருளாதாரம் பாதிக்கப்படுமென்றும் மைசூர் சர்க்கார் தெரிவித்தது.

பிரச்னை மத்திய சர்க்காருக்குச் சென்றது. அங்கு நியமிக்கப்பட்ட நிபுணர் கமிட்டி ரூ. 169 லக்ஷம் நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்று நிர்ணயித்தது. இதை மைசூர் அசெம்பிளி நிறைவேற்ற வேண்டுமாம்!

Regd. No.M. 5934

Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press. (Phone 2241) 32, Broadway, Madras-1.
Editor : P. JEEVANANDAM

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON